# வேதமும் வேதாங்கமும்






ஸ்ரீ வேதவ்யாஸாய நம:

வெளியிடுவோர்:

"வைதிக தர்ம வர்த்தினி"

(ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா)

2/218, தம்பு செட்டி தெரு, சென்னை 1,

விலை 2 அணா.

1018

IMSO302

# வேதமும் வேதாங்கமும்.

நாம் வஸிக்கும் த்வீபத்திற்கு "ஜம்பூத்வீபம்" என்று பெயர். இது ஸகல தேவர்களாலும் "கர்மபூமி" எனக் கொண்டாடப்படுகிறது. இதில் புண்ணிய நூல்களும், பகவதவதாரங்களும், பாவனமான நதிகளும், உத்தம க்ஷேத்திரங்களும் உண்டு. இத்தேசத்தில் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்னமேயே ஓர் மதம் தோன்றியது. அம்மதத்தைத் தழுவி வந்தவர்கள் "ஆர்யர்கள்" என அழைக்கப்படுகிறார்கள். கலைகளிலும், நாகரிகத்திலும் அவர்கள் ஒப்பற்ற கீர்த்தி பெற்றனர். அவர்கள் பேசிவந்த தேவபாஷையிலிருந்து மற்ற பாஷைகள் உண்டானதாகவும், அவர்களிடமிருந்தே மற்ற நாட்டார் நாகரிகத்தைக் கற்றுக்கொண்டதாகவும் சொல்வதுண்டு அவ்வார்யர்கள் கைக்கொண்ட தர்மமே "ஸநாதநதர்மம்" 'ஆர்யமதம்' 'ஹிந்து மதம்' எனப் பல நாமங்களால் அழைக்கப்படுகிறது. இம்மதத்திற்கு ஆதாரமான க்ரந்தங்கள் தேவபாஷையிலேயே அமைந்திருக்கின்றன. அவைகளில் முக்கியமானது வேதம். அதைத் தழுவி பின்னர் பற்பல நூல்கள் தோன்றின. பேரளவில் அவை பலவாராக வேறுபட்டிருப்பினும் ஒரே கடவுளைப் பற்றியே கூறுவனவாகும். அன்றியும் அந்த க்ரந்தங்கள் எல்லாம் நேராகவோ, பரம்பரையாகவோ வேதத்தின் கருத்தையே வெளிப்படுத்துகின்றன. அவைகள் 'அங்கங்கள்' என அழைக்கப்படுகின்றன. ப்ராணிகளுக்கு அங்கங்கள் எப்படி இன்றியமையாத ஸாதநங்களோ அப்படியே வேதாங்கங்களும் வேதத்திற்கு ஸாதநங்களாகும். அவ்வேதம் ஒன்றேயாயினும் சிலகாரணங்களால் நான்காகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அவ்வேதங்கள் 4; வேதாங்கங்கள் 6; உபாங்கங்கள் 4; ஆக 14 வித்யைகள் என்றும், உபவேதங்கள் 4 சேர்ந்தால் 18 வித்யைகள் என்றும் கூறுவார்கள். இவையனைத்தும் வேதத்தைத் தழுவினவையாதலால் இவைகளிலிருந்து உண்டான

வெவ்வேறு மதங்களும் 'வைதிக மதம்' 'ஆஸ்திக மதம்' எனப் பெயர் பெறும். வேதத்தை ஆதாரமாகக் கொள்ளாத மதங்களை 'அவைதிகம்' 'நாஸ்திகம்' என்பார்கள். அதிலும், மாத்யமிக, யோகாசார, ஸௌத்ராந்திக, வைபாஷிக, சார்வாக, திகம்பர, என்று சில முக்கியப் பிரிவுகளுண்டு,

## வேதம்.

வேதம் அறிவையளிக்கும் நூல் ப்ரத்யக்ஷத்தாலும் அநுமானத்தாலும் உபமானத்தாலும் எதுநமக்கு விளங்கவில்லையோ அத்தகைய ஆத்மா ஜீவன் பரலோகம் மோக்ஷம் ஆகியவைகளை வெளியிடுவதால் வேதத்திற்கு வேதம் எனப்பெயர் தோன்றிற்று. அதையே 'ஶ்ருதி' என்றும் சொல்வார்கள். அது காதினால் கேட்டுகேட்டு உபதேச மூலமாகப்பறவியதால். அப்பெயரை ஏற்குமென்பார்கள் அவ்வேதம் சில ஆண்டுகளுக்கு முன் சில மஹர்ஷிகளால் எழுதப்பட்டது, எனத் தற்காலத்தவர் கூறுவர். ஆனால் அவ்வேதத்தைப் பின்பற்றி சில க்ரந்தங்களை இயற்றிய பெரியோர்களும் பாஷ்யம் எழுதிய ஸ்ரீ ஸாயணாசார்யர் பாஸ்கரர் முதலிய மஹர்ஷிகளுமான வித்வான்கள் "வேதம் நித்தியமானது, அநந்தமானது, மனிதனால் எழுதப்படாதது, ஈசன் முகத்திலிருந்து வெளி வந்தது, அதை மஹர்ஷிகள் தபோபலத்தாலறிந்து லோகோபகாரமாக வெளியிட்டார்கள்" என்றே நிச்சயித்திருக்கின்றனர். க்ருதயுகம், த்ரேதாயுகம், த்வாபரயுகம் ஆகிய 3 யுகங்களில் உள்ளவர்கள் தீர்காயுஸ் உள்ளவர்களாகவும் தபஸ்விகளாகவும் த்ருடமான புத்திபலம் உள்ளவர்களாகவும் இருந்தனர். அதனால் ஒன்றாகவே இருந்த வேதத்திலிருந்து ருக், யஜுஸ், ஸாம, அதர்வ என்பவைகளைப் பொருக்கி எடுத்து அந்தந்த கர்மாவில் பயன் படுத்திக் கொண்டிருந்தனர். கலியில் பிறப்பவருக்கு புத்திபலம் ஆயுள் எல்லாம் குறைவென அறிந்த மஹாவிஷ்ணு, வ்யாசராக அவதாரம் செய்தார். அந்த வேதவ்யாஸ மஹர்ஷியே அவ்வேதத்தை 'ருக், யஜுஸ், ஸாம, அதர்வ, என்று நான்காகப்பிரித்து தாம் காரணப்பெயரைப் பெற்

ஞர். இவ்வேதத்திலுள்ள பெரும்பாகம் யாகத்தைப் பற்றியவையேயாகும். யாகத்தைச் செய்து முடிக்க பல ரித்விக்குகள் (கர்மாவை செய்பவர்கள்) வேண்டும், யாகம் செய்யும் யஜமானன், ப்ரும்மா, அத்வர்யு, ஹோதா, உத்காதா ஆகிய இவர்கள் ப்ரதானமானவர்கள். அந்தந்த தேவதைக்குறிய மந்த்ரங்களைக் கூறி அவரவர் குணத்தை வெளியிடும் ஹோதாவுக்கு வேண்டியவைகளை உட்கொண்ட ருக்வேதத்தை "ஹோத்ரு ப்ரயோகம்" என்பார்கள். எல்லாத் தொழில்களையும் யஜமானனுக்காகச் செய்யும் அத்வர்யுவுக்கு வேண்டியவைகள் யஜுர்வேதத்திலுள்ளன, அந்தந்த தேவதைகளைக்கானம் செய்து ஸந்தோஷிக்கச் செய்யும் உத்காதா என்பவருக்குரியது ஸாம வேதத்தில் காணப்படுகிறது. யஜமானன் ப்ரும்மா இவர்களுக்குரியனவும் யஜுர்வேதத்திலேயே இருக்கின்றன. யாகத்திற்கு உபயோகப்படாமல், ஸம்பத்துண்டாகவும், துரிதங்களை உடனே நிவர்த்திக்கவும், எதிரியைக் கொல்லவும் முக்ய உபயோகமானது அதர்வவேதம். இந்நான்கு வேதங்களும் உலகத்திற்கு தர்ம, அர்த்த, காம, மோக்ஷ என்ற சதுர்வித புருஷார்த்தத்தை அளிப்பனவாகும். இவ்வேதம் பொதுவாகக் கூறும்போது "தர்மகாண்டம், ப்ரும்மகாண்டம்" என இருவகைப்படும். தர்மம் அல்லது கர்மம் என்பது தர்மார்த்த காம மென்ற மூன்று பலனையே அளிக்கத்தக்கது.

ப்ரும்மகாண்டம் மோக்ஷ ஸாம்ராஜ்யத்திற்கேற்ற மார்க்கத்தைக் கூறும். கர்மகாண்ட வேதம் 'மந்த்ரம்' 'ப்ராஹ்மணம்' என இருவகைப்படும். அநுஷ்டாநத்திற்குரிய த்ரவ்யம், தேவதை முதலியவைகளை விளக்குவது மந்த்ரம். அம்மந்த்ரம், பாதங்களோடு கூடி காயத்ரீ முதலிய சந்தஸ்களுடன் சேர்ந்திருந்தால் 'ருக்மந்த்ர' மெனவும், கானத்தோடு சேர்ந்திருந்தால் 'ஸாமமந்த்ர' மெனவும், இவ்விரண்டோடும் சேராவிட்டால் 'யஜுர் மந்த்ர' மெனவும் சொல்லப்படும். ப்ராஹ்மணமும் 'விதி' 'அர்த்தவாதம்' என இருவகைப்படும். அவ்விதி பலவகைப்படினும் ஓர் கர்மாவை விதிப்பதே அதன்

கருத்தாகும். விதித்த கர்மாவைப் பற்றித் துதிப்பதும், வேண்டாவற்றை நிந்திப்பதும் அர்த்தவாதம். இக்கர்ம காண்டத்தைப் பற்றி ஸூத்ரமாகவும், பாஷ்யமாகவும், ஜைமினி, சபரர், பட்டர், ப்ரபாகரர் முதலிய மஹான்களால் எழுதப்பட்ட சாஸ்த்ரங்களுக்கு 'பூர்வமீமாம்ஸை' என்று பெயர் ப்ரம்மகாண்ட உபநிஷத்தைப் பின்பற்றி வேதவ்யாஸரால் ஸூத்ரமாக வெளியிடப்பட்டு ஸ்ரீ சங்கரர் முதலிய ஆசார்ய புருஷர்களால் பாஷ்யம் எழுதப்பட்ட க்ரந்தங்களுக்கு 'உத்திரமீமாம்ஸை' அல்லது 'வேதாந்தம்' என்றுபெயர். யஜுர்வேதத்தில் ஸுக்ல யஜுர்வேதம், க்ருஷ்ண யஜுர்வேதம் என இருபிரிவுகள் உள. க்ருஷ்ண யஜுர்வேதத்தில் 7 காண்டங்களும் 3 அஷ்டகங்களும் அருண காடகமும் சேர்ந்து 82 ப்ரஸ்னங்களிருக்கின்றன. காண்டங்களை ஸம்ஹிதை என்றும் மற்றவைகளை ப்ராம்மணம் என்றும் கூறுவர். அதில் வேதாந்தத்தைக் கூறுவது 3 ப்ரஸ்னங்களாகும். வேதம் ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வவேதம் எனநான்காம். இதைஅபிவாதையேகூறி பெரியோர்களைக் நமஸ்கரிக்கும்போது கோத்ரம் ஸூத்ரம் யஜுஸ்ஸாகாத்யாயீ எனக்கூறுகிறோம். அவ்வேதத்தின் அங்கங்கள் 6.

## (1) சிக்ஷா.

வேதத்தை ஸ்வரமில்லாமல் எழுத்தைவிட்டு, ஹ்ரஸ்வ தீர்க்கங்களைத்தவறி உச்சரித்தால் பலனைத் தராததோடு, அப்படிச்சொல்பவனைக் கெடுக்குமாதலால் மிக்க ஜாக்கிரதையாக வேதத்தை ஓதவேண்டும். உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம் என ஸ்வரம் மூவகைப்படும் அக்ஷரங்கள் அச்சு, ஹல் என்று இருவகைப்படும். அச்சு ஹ்ரஸ்வம், தீர்க்கம், ப்லுதம் என மூன்று பிரிவுகளுடன் கூடியது. இவைகளைப்பற்றிக் கூறுவது 'சிக்ஷா' என்ற வேதாங்கம். இச்சாஸ்த்ரம் பாணினி என்ற மஹாமுனிவரால் எல்லாவேதங்களுக்கும் பொதுவாக ஐந்து காண்டங்களாகவும், மற்றும் பல முனிவர்களால் ஒவ்வொரு வேதத்

திற்கும் தனித்தனியாகப் பல ப்ராதிசாக்யங்களாகவும் வெளியிடப் பட்டிருக்கிறது.

## (2) வ்யாகரணம்

"ஒரு சப்தம் நன்கு குற்றமற உச்சரிக்கப்படின் ஸ்வர்க்கலோகத்தில் நமது இஷ்டத்தைக் கொடுக்கும்" என்ற சொற்படி ஒவ்வொரு பதத்தையும் குற்றமறக் கூறுதல் அவஸ்யம். சிக்ஷா சாஸ்த்ரத்தால் எழுத்து சுத்தமாகத் தெரிந்தாலும் பதத்தை அறிய மற்றெரு சாஸ்த்ரம் அவஸ்யம் வேண்டும். பாணினி மஹர்ஷி நடராஜப் பெருமான் நடனம்செய்த பொழுது அவரது உடுக்கையிலிருந்து கிளம்பிய அ-இ-உண்-ஹல் என்ற 14 ஸூத்ரங்களை ஆதாரமாகக் கொண்டு, அவற்றை எட்டு அத்தியாயங்களாக எழுதினார். காத்யாயனர் என்ற ரிஷி அதற்கு ஓர் வார்த்திகம் இயற்றினார் அதற்கு பதஞ்சலி மஹரிஷி மஹாபாஷ்யம் எழுதினார். மற்றும் பலரால்வேதாங்கமல்லாத பலவ்யாகரணங்கள் இயற்றப் பட்டிருக்கின்றன. இப்பொழுது எங்கும் எல்லோராலும் கற்கப்படுவது பாணினி வ்யாகரணமேயாகும்.

## (3) நிருக்தம்

அர்த்தத்தை உணராத வேதோச் சாரணத்திற்குப் பூர்ண பலமில்லாததால் யாஸ்கமுனிவரால் பதின்மூன்று அத்யாயங்கள் கொண்ட நிருக்தம் என்று ஒரு நூல் எழுதப்பட்டது. அதில் நாம, ஆக்யாத, நிபாத, உப ஸர்க்க என நான்கு வகைப்பட்ட பதங்களை விபரித்து பதங்களுக்கு அர்த்தமும் கூறப்பட்டிருக்கிறது. வைதிக பதார்த்தத்தை விளக்க அத்யாயம் ஐந்துகொண்ட ஓர் நிகண்டுவும் அவராலேயே இயற்றப்பட்டது.

## (4) சந்தஸ்

ஒவ்வொரு மந்த்ரத்தையும், அதற்குரிய ரிஷி, சந்தஸ் தேவதை இவைகளையறிந்து உச்சரிக்கவேண்டியது. ஆகை

யால், சந்தஸ்ஸை விளக்க பிங்களரால் எட்டு அத்யாயங்களுடன் சந்தஸ் சாஸ்த்ரம் எழுதப்பட்டது. அதில் மூன்று அத்யாயங்களால் காயத்ரி முதலிய வேதசந்தஸ்ஸுகளும் ஐந்து அத்யாயங்களால் புராண இதிஹாஸங்களுக்குரிய லௌகிக சந்தஸ்ஸுகளும் விளக்கப்பட்டிருக்கின்றன.

## (5) ஜ்யோதிஷம்

வேதோக்தகர்மாக்களை அநுஷ்டிக்க நாள் நக்ஷத்ரம் லக்நம் முதலியவைகளை விளக்கி ஆதித்ய, கர்கர் முதலியவர்களால் ஜ்யோதிஷம் என்ற வேதாங்கம் எழுதப்பட்டது. இதைத் தழுவிய பற்பல நூல்கள் பின்னர் விரிவாக எழுதப்பட்டன.

## (6) கல்பம்

வேதம் எல்லையற்றதால் மறைந்துள்ள சாகைகளிலிருந்து எந்தக்கர்மாவை எக்காலத்தில் எதற்குப் பிறகு எப்படிச் செய்வது என்றதை விளக்குவது கல்பமாகும். முற்கூறியபடி ஹோதாவுக்குவேண்டியவைகளை ஆஸ்வலாயன, ஸாங்யாயன கல்பங்கள் வெளியிடுகின்றன. அத்வர்யுவுக்கு வேண்டியவைகள் போதாயநர், ஆபஸ்தம்பர், காத்யாயனர் முதலியவர்களாலும்,உத்காதாவிற்குவேண்டியவைகள் லாட்யாயனர், த்ராஹயாயணர் முதலியவர்களாலும் எழுதப்பட்டுள்ளன. நான்கு வேதங்களும் அதன் ஆறு அங்கங்களும் கூறப்பட்டன. ஸ்ராவணத்தில் வேதாரம்பகாலத்தில் வேதத்தின் அடியும்6அங்கங்களின் முதல் பாகமும் கூறப்படும்.

## உப அங்கங்கள் (1) புராணம்

நமக்குக் கை ஒரு அங்கம். விரல் உபாங்கம். மேலே சொன்ன ஆறு அங்கங்களுக்கும் ஸாதகமான அங்கங்கள் சிலவுள. அவைகளே உபஅங்கங்கள். அவை புராணம்

ந்யாயம், மீமாம்ஸை, தர்மஸாஸ்த்ரம், என நான்கு வகைப்படும். புராணங்கள் ஜகத்ஸ்ருஷ்டி, அரசர் வம்சம், பெரிய அரசர்களின் சரிதம், மந்வந்தரம் முதலிய வைகளை விளக்கும். ப்ரம்மம், பாத்மம், வைஷ்ணவம் சைவம், பாகவதம், நாரதியம் மார்க்கண்டேயம், ஆக்னேயம், பவிஷ்யம் ப்ரும்மவைவர்த்தம், லிங்கம், வாராஹம், ஸ்காந்தம், வாமநம், கௌர்மம், மாத்ஸ்யம், காருடம், ப்ரும்மாண்டம், என்ற பதினெண் புராணங்களை வேதவ்யாஸர் இயற்றினார். நாரஸிம்ஹம், நாந்தம், சிவ தர்மம், நாரதியம், காபிலம், ப்ரும்மாண்டம், லிங்கம், ஸாம்பம், மாரிசம் முதலிய மற்றும் சில புராணங்களும் பல மஹர்ஷிகளால் இயற்றப்பட்டிருக்கின்றன. அவைகட்கு உபபுராணம் எனப்பெயர். இவை வேதத்தின் பொருளை கதைகள் மூலமாகக் கூறுகின்றன.

## (2) ந்யாயம்

ந்யாய சாஸ்த்ரம் மஹர்ஷி கௌதமரால் ஐந்து அத்யாயங்களாக இயற்றப்பட்டது ப்ரமாணம் முதலிய பதினாறு பதார்த்தங்களின் தத்துவத்தை அறிவதே இச் சாஸ்த்ரத்தின் பலன். கணாதர் என்பவரால் பத்து அத்யாயங்கள் கொண்ட ஒரு சாஸ்த்ரம் வரையப்பட்டது. அதை வைசேஷிகம் என்பார்கள். அதில் த்ரவ்யம் முதலிய ஏழு பதார்த்தங்களில், தத்துவம் கூறப்பட்டுள்ளது. அதுவும் ந்யாயத்திலேயே சேரும். இவ்விரண்டையும் தர்க்க சாஸ்த்ரமென்பதுண்டு. கௌதமர் கணாதர் ஆகிய இருவர் ஸூத்ரங்களைத் தழுவியும் தழுவாமலும் பல மஹான்களால் பல க்ரந்தங்கள் வெளியிடப்பட்டன. ஒவ்வொரு பொருளினுடைய உண்மையையும் விளக்க இன்றியமையாதது இந்த சாஸ்த்ரம். ப்ரத்யக்ஷம், அநுமானம், உபமாநம், சப்தம் முதலிய ப்ரமாணங்களுக்கு விரிவாக இதில் லக்ஷணம் கூறப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு ஸாஸ்த்ரத்தின் உண்மையை ஒழுங்காகக் கூற தர்க்கம் இன்றியமையாதது.

## (3) மீமாம்ஸை

மீமாம்ஸை என்றால், கௌரவமாக விசாரிப்பது என்று பொருள். ஈசனால் அநுக்ரஹிக்கப்பட்ட அபௌருஷேயமான வேதத்தைப்பற்றி விசாரிப்பதால் இப்பெயர் பொருந்தும். 'கர்மமீமாம்ஸை,' சாரீரக மீமாம்ஸை, என மீமாம்ஸா சாஸ்த்ரம் இருவகைப்படும். இவற்றுள் கர்ம மீமாம்ஸை என்பது ஜைமினி மஹர்ஷியால் பன்னிரண்டு அத்தியாயங்களாக எழுதப்பட்டது. இதில் தர்ம லக்ஷணம் எந்த மந்த்ரத்தை எங்கே படிப்பது, ஊஹம், முதலிய கர்மாவைப்பற்றிய பல தத்துவங்களும், கர்மபலமும் கூறப்பட்டுள்ளது. ஸங்கர்ஷண காண்டம் என்ற நான்கு அத்யாயங்களில் தேவஸ்ரூபங்களை விளக்கி ஜைமினிமுனிவராலேயே மற்றோர் சாஸ்த்ரம் எழுதப்பட்டது. தேவதைகளை உபாஸித்தலும் கர்மாவானதால் அது கர்மகாண்டத்துடன் சேர்ந்ததாகும். கர்மாவில் உண்டாகும் சந்தேகங்களை நீக்க இது முக்கியமானது.

வ்யாஸ மஹர்ஷியால் உபநிஷதர்த்தங்களைக் கொண்ட ப்ரும்மஸூத்ரம் என்ற நான்கு அத்யாயங்கள் இயற்றப்பட்டன. அதற்கு அத்வைதபரமாக ஸ்ரீசங்கராசார்யரும் சிவாத்வைதபரமாக ஸ்ரீநீலகண்ட சிவாசார்யரும். விசிஷ்டாத்வைதபரமாக ஸ்ரீராமாநுஜாசார்யரும், த்வைதபரமாக ஸ்ரீமத்வாசார்யரும், பாஷ்யமெழுதினார்கள். இவைகளில் உபநிஷதர்த்தங்களை விவரித்து ப்ரும்மலக்ஷணம், ஜீவலக்ஷணம், ஜகத்ஸ்ருஷ்டி, மாயாபந்தம், மாயாநிவ்ருத்தி, அதற்கேற்ற மார்க்கம், ஸமதமாதிகள், வைராக்யம், ஜீவன் லோகாந்தரம் செல்லுதல், ஸகுணப்ரும்மம், நிர்க்குண ப்ரும்மம், ஜீவன் முக்தி அதன் லக்ஷணம், மஹாவாக்யம், விதேஹமுக்தி, முதலிய பல அரியபெரிய விஷயங்கள் பொலிந்து விளங்குகின்றன. பக்தி, கர்மம் முதலிய மார்க்கங்களால் பெறும் சுகம் ஸாஸ்வதமன்று. புண்யமுள்ள வரையில்தான் இந்த்ர லோகம் முதலிய சுகம் கிட்டும். புண்ணியம் குறைந்தவுடன் முன் போலவே பூலோகத்திற் பிறத்தல்வேண்டும். பிறப்பவ

னுக்கு இறப்பு இயற்கையே. ஆதலால் பிறப்பு இறப்பில்லாத ஸாஸ்வத சுகத்தைப் பெறல்வேண்டும். அதற்கு ஸாத்யமானது வேதாந்த சாஸ்த்ரம் ஒன்றேயாகும். அந்த சாஸ்த்ரம் தோன்றியது இந்தநாட்டிலேயேயாகும். வேதத்தின் முடிவான உபநிஷத்துக்களையே வேதாந்த மென்பார்கள். ஒவ்வொரு வேதத்தினின்றும் தோன்றிய உபநிஷத்துகள் பலவுண்டு. அவைகளில் பத்து உபநிஷத்துக்களுக்கே ஸ்ரீசங்கரர் முதலிய மதாசார்யர்கள் பாஷ்யம் எழுதினார்கள். அவை ஈச, கேன, கட, ப்ரஸ்ன, முண்ட, மாண்டுக்ய, தைத்திரீய, ஐதரேய, சாந்தோக்ய, ப்ருஹதாரண்யகம் எனப்படும். இவையனைத்தும் பரப்ருமமத்தையே நேர்முகமாகவோ, மறைமுகமாகவோ கூறுவனவாகும். இதே ஸாரீரக மீமாம்ஸை.

## (4) தர்ம சாஸ்த்ரங்கள்

தர்மம் என்ற பதத்திற்கு (தன்னை அநுசரிப்பவனை நரகத்தில் விழவிடாமல்) தரிப்பது என்று பொருள். அவரவரது கடமையைச் செய்யும்படி ஸாஸநம் செய்வதால் அந்நூலுக்கு தர்ம சாஸ்த்ரம் என்று பெயர். அதை ஸ்ம்ருதி என்றும் சொல்வார்கள். வேதத்தின் உட்கருத்தை நினைத்து ரிஷிகள் எழுதியபடியால் ஸ்ம்ருதி என்ற பெயர் அதற்குப் பொருந்தும். ஒரு மனிதன் பிறந்தது முதல் முடிவுவரை செய்து கொள்ளவேண்டிய நாற்பது ஸம்ஸ்காரங்களும் இதில்சொல்லப்படுகின்றன. சரீரத்திலுள்ளே உள்ள ஜீவனைச் சுத்தப்படுத்தவே ஸம்ஸ்காரங்களேற்பட்டன. கர்பாதானாதிஜாதகர்மா முதலிய சில கர்மாக்கள் தகப்பனாலும், விவாஹம் முதலிய சில தன்னாலும், தஹநம் முதலிய சில புத்திரனாலும் செய்யத்தக்கன. இந்த ஸம்ஸ்காரங்களும் வர்ண தர்மங்களும் ஆஸ்ரம தர்மங்களும் விசாலமாக ஸ்ம்ருதிகளில் வெளியிடப்பட்டிருக்கின்றன. வர்ணங்கள் ப்ராம்மண, க்ஷத்ரிய, வைஸ்ய, சூத்ர, என நால் வகைப்படும். இந்நான்கு வர்ணங்களும் ஆதி புருஷனான பகவானிடமிருந்தே உண்டானவை. விராட் புருஷனுடைய முகத்திலிருந்து தோன்றியவன் ப்ராம்மணன்

புஜங்களிலிருந்து தோன்றியவன் க்ஷத்ரியன், தொடைகளிலிருந்து உதித்தவன் வைஸ்யன், பாதங்களிலிருந்து உதித்தவன் சூத்திரன். அவரவர்களுண்டான இடத்திற்குத்தக்கபடியே அவரவர் கடமைகளும் அமைந்துள்ளன. வேதமோதுதல், ஓதுவித்தல், யாகம் செய்தல் செய்வித்தல், தாநம்வாங்குதல், கொடுத்தல் ஆகிய ஷட்கர்மாக்சளும் தவமும் முதல்வாது கடமையாகும். இதில் யாஜநம் வேதமோதி வைத்தல் தாநம் வாங்கல் 3-ம் ஜீவனார்த்தமாம். மற்ற 3-ம் பரலோகார்த்தமாம். யாகம், அத்யயநம், தாநம், தர்மமாக ப்ரஜைகளைப் பரிபாலித்தல் ஆகியவை க்ஷத்திரியர் கடமையாகும். யாகம், அத்யயநம், தாநம், பசுவை ரக்ஷித்தல், உழுது பயிரிடுதல், வியாபாரம் இவை வைஸ்யாது கடமை. இந்தத்விஜர்களென்ற மூன்று வர்ணத்தாருக்கும் தொண்டு புரிவது சூத்ரர் கடமையாகும். முதல் மூன்று வர்ணத்தாரும் தாயின் வயிற்றிலிருந்து பிறப்பதைத்தவிரவேதோக்தமான கர்மாக்களால் மற்றொரு முறை பிறப்பதால் இருபிறப்பாளர் (த்விஜர்) என்று அழைக்கப்படுகிறார்கள். ஆஸ்ரமங்கள் ப்ரும்மசர்யம் கார்ஹஸ்த்யம், வாநப்ரஸ்தம், ஸன்யாஸம் என நான்காகப்பிரிக்கப்பட்டிருக்கின்றன. உபநயநம் என்ற ஸமஸ்காரம் ஆனபிறகு குருகுலம் சென்று நியமமாக வித்யாப்யாஸம் செய்வது முதல் ஆஸ்ரமம். இரண்டாவது உத்தம குலத்திலுதித்த ஸமாநமான கன்னிகையை மணந்து இருவருமாக அக்நிபூஜை, அதிதிபூஜை, பஞ்சமஹாயக்ஞம் முதலிய கர்மாக்களை அநுஷ்டித்தலாம். மூன்றாவது தர்ம பத்னியுடன் காட்டிற்குச்சென்று ஆங்குள்ள கந்த மூலங்களைப் புசித்து தவம் புரிதலாம். நான்காவது, வீடு பொருள், மனைவி, மக்கள் முதலிய எல்லாவற்றையும் துறந்து ஊரூராகச்சென்று, மாதுகாம் செய்து வேதாந்த விசாரம் செய்வதாகும். அந்த ஸந்யாஸமும் பஹூதக, குடீசக, ஹம்ஸ, பரமஹம்ஸ, ப்ரிவ்ராஜக என்று அவரவர் பரிபாகத்திற் கேற்றபடி பல பிரிவுகளாக பிரிக்கப்பட்டிருக்கிறது. அந்தந்த வர்ணத்தாரும் ஆச்ரமிகளும் காலை முதல் இரவுவரை என்னென்ன செய்யவேண்

டும், எப்படி எப்படிச் செய்யவேண்டும் என்பது தர்ம சாஸ்த்ரங்களில் விஸ்தமாக வெளியிடப்பட்டிருக்கிறது. மநு, யாக்ஞவல்க்யர், விஷ்ணு, யமர், அங்கிரஸ், வஸிஷ்டர், தக்ஷர், ஸம்வர்த்தர், சாதாதபர், பராசரர், கௌதமர், சங்கலிகிதர், ஹாரீதர், ஆபஸ்தம்பர், உஸநஸ், வ்யாஸர் காத்யாயநர், ப்ருஹஸ்பதி, தேவலர், நாரதர், பைடீநஸி முதலிய மஹர்ஷிகளால் பல தர்ம சாஸ்த்ரங்கள் வெளியிடப்பட்டிருக்கின்றன. ஆதிகவியான ஸ்ரீ வால்மீகி மஹர்ஷி இயற்றிய ஸ்ரீ ராமாயணத்தை, அது நடந்த கதையாதலால் இதிஹாஸம் என்றாலும், ஸம்ருதிகளுடனேயே சேர்த்தல் வேண்டும். தாய்தந்தைகளிடம் புதல்வன் நடந்து கொள்ளவேண்டிய முறைமை, பொய் சொல்லாமை, குருபக்தி, ஸஹோதரவாஞ்சை, நீதி, ப்ரஜா பரிபாலநம், நித்யகர்மாநுஷ்டாநம், தர்மயுத்தம், தீர்த்த, கௌரவம், அதிதிபூஜை, தாநம், விநயம், ஸ்த்ரீபுருஷ தர்மம், க்ஷத்ரிய தர்மம், பணிவிடை, கற்பு, அதர்மபலன், தர்மபலன் முதலிய பல தர்மங்களை ஆங்காங்கு விஸ்தாரமாகவும் கதை ரூபமாகவும் எடுத்துக் காட்டியிருப்பதாலும், 'வேதமும் தர்ம சாஸ்த்ரமும் எனது ஆக்ஞை' என்ற வாஸுதேவரே நேரில் தர்மாநுஷ்டாநம் செய்து காட்டியதாலும் ராமாயணத்தை வால்மீகி ஸ்ம்ருதி என்றே பலர் சொல்வார்கள்.

**மஹாபாரதம்:—** வேதவ்யாஸரால் வரையப்பட்ட பாரதத்தில் பல விடங்களில் கதை மூலமாகவும் நேராகவும், கேள்விக்குப்பதிலாகவும் விஸ்தாரமாக தர்மங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன. 'பாரத: பஞ்சமோவேத:' என்று ஓர் பழமொழியுமுண்டு. வேதமென்றே சொல்லத்தக்க இந்நூலை தர்மசாஸ்த்ரத்தில் சேர்ப்பது பொருத்தமற்றதல்ல. வேதத்தை நான்காகப் பிரித்து பதினெண் புராணங்களையும் வெளியிட்ட வ்யாஸர் தமது பாரத மத்தியில் 'பகவத்கீதை' என்ற அழகிய ஓர் க்ரந்த ரத்நத்தையும் இயற்றியுள்ளார். ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு உபதேசிப்பதாக அரிய பல தத்துவங்களை அதில் வெளியிட்டிருக்கிறார். அந்த கீதைக்கு நமது ஆசார்யர்களும் பாஷ்ய

மெழுதினர். 10 உபநிஷத்துக்களின் பாஷ்யம் ப்ரும்ம ஸூத்ர பாஷ்யம் கீதா பாஷ்யம் என்ற மூன்றும் ப்ரஸ் தாநத்ரய மெனப்படும்.

**உபவேதங்கள்:—** முன் சொன்ன நான்கு வேதங்களுக் கும் முறையே நான்கு உபவேதங்களுண்டு. அவை ஆயுர் வேதம், தநுர்வேதம், காந்தர்வவேதம், அர்த்த (சாஸ்த்ரம்) வேதம் என்பனவாம். மனிதனது ஆயுள், தேஹம், இந்த் ரியம் முதலியவற்றைப்பற்றிச் சொல்லும் வேதம் ஆயுர் வேதம். இது ப்ரும்மா, தன்வந்திரி முதலிய பலரால் வெளியிடப்பட்டது. அவைகளை ஒன்றாகச் சேர்த்து "சரகஸம்ஹிதை" என்ற புத்தகமாக "சரகர்" வெளி யிட்டார். "வாக்படர்" முதலிய பலரும் பல வைத்யக்ரந் த்ங்களை இயற்றி இருக்கிறார்கள். "சுச்ருதர்" முதலிய பெரியோர் வெளியிட்ட ரதி சாஸ்த்ரமும் இதில் சேர்ந்த தேயாகும். இவ்வேதம் ஏறக்குறைய தர்ம சாஸ்த்ரத்தை ஒட்டியிருப்பதால் அவ்வேதப்படியே ப்ராதஸ்நாநம், நியமாஹாரம்முதலியவைகளை அநுஷ்டிப்பவனுக்குவியாதி கிட்டே அணுகாது. அப்படி நடவாததால் வரும் பலவித வியாதிகளுக்கும் இங்கு பலவித சிகித்ஸை சொல்லப்பட்டி ருக்கிறது. இதில் பசு, யானை, குதிரை, செடிகொடிகளுக் கும் வைத்ய முளது.

**தநுர் வேதம்:—**வில், அஸ்த்ர, சஸ்த்ரங்களைப்பற்றிக் கூறும் இந்த வேதம் நான்கு அத்யாயமாக விச்வாமித்திர ரால் வெளியிடப்பட்டது. அதில் யந்த்ரவிதி, மந்த்ரவிதி என இருவகையான பிரிவுகளுண்டு. பாணம், சூலம், கத்தி, சக்ரம், இவை முதலியன எறியப்படும் பொழுது முதல் வகையைச் சார்ந்ததாகும். இவைகளே அந்தந்த தேவதா மந்த்ரோச்சாரணம் செய்து ப்ரயோகஞ் செய்யப் படும்பொழுது பின் சொன்னதிற் சேரும். தர்ம யுத்தம் நடக்கும்பொழுது அஸ்த்ரங்களுக்கு ப்ரத்யஸ்த்ரங்கள் ப்ரயோகம் செய்யும் நேர்மையைப் பார்க்கப் பல தேவ ரிஷிகள் கூடுவது வழக்கம். நாகாஸ்த்ரத்திற்கு காரு டாஸ்த்ரமும், ஆக்நேயாஸ்த்ரத்திற்கு வாருணாஸ்த்ரமும்

மேகாஸ்த்ரத்திற்கு வாயவ்யாஸ்திரமும், ப்ரத்யஸ்த்ரங்களாகும். அஸ்த்ர சஸ்த்ரங்களுக்கு யார் அதிகாரி, யாரிடத்தில், எப்படி ப்ரயோகம் செய்வது, யுத்தத்திற்கு எப்படி ஸேனைகளை ஸன்ஞஹம் செய்வது முதலியன வெகு ஸ்பஷ்டமாக இவ்வேதத்திற் கூறப்பட்டுள்ளது.

**காந்தர்வ வேதம்:—** இது பரதரால் இயற்றப்பட்டது. கீதம், வாத்யம், நர்த்தநம் முதலியவை இதில் கூறப்பட்டிருக்கின்றன. ஸ்ருதிலயப்பட்டு தாளம் தவராமல் பக்தியுடன் பகவானைப் பாடித் துதிப்பவர்களுக்கு எளிதில் ஈசனருள்கிட்டும். கைலாஸகிரியைத் தூக்கித் தூரத்திலெறிய எண்ணிய ராவணனது கைகள் மலையின் கீழகப்பட்டுக்கொண்டன. நாரதர் கட்டளைப்படி ஸாமகாநம் செய்து பகவானைத்துதித்து ராவணன் விடுபட்டான். மனதிலுள்ள எண்ணத்தைச் சொற்களால் வெளிப்படுத்தாமல் கை, முகம், கண் முதலியவைகளால் வெளிப்படுத்துவதே நர்த்தநமாகும். பகவானுடைய ஆராதநத்தில் இதுவும் ஒரு அங்கமாகும். சிதம்பர க்ஷேத்ரத்தில் நடராஜப் பெருமான் ஆநந்தத் தாண்டவமாடினார். இவைகளைப்பற்றி மற்றும் பலரால் பல க்ரந்தங்கள் எழுதப்பட்டன. அவைகளில் ஸங்கீத ரத்நாகரம் என்பது முக்யமாம். இதில் ஸ்வரபேதம், தாளபேதம், ராகங்களின் லக்ஷணம், பெயர், அப்பெயருண்டான காரணம், அந்தந்த ராகத்திற்கேற்ற காலம், அதிகாரி முதலிய பல அரிய விஷயங்களடங்கியிருக்கின்றன.

**அர்த்த (சாஸ்த்ரம்) வேதம்:—** இது பல விஷயங்களை குறித்துப் பல பெரியோர்களால் இயற்றப்பட்டது. ராஜீய விஷயமாக சுக்ரநீதி, காமந்தகநீதி, கௌடில்யநீதி எனப் பல க்ரந்தங்களுண்டு. அஸ்வம், கஜம், பசு முதலிய மிருகங்களை எப்படி அடக்கி வஸ்யமாக்குவது? பலனளிக்காதவைகளை எப்படிப் பலனளிக்கும்படிச் செய்வது? என்பது போன்ற பல விஷயங்களை உள்ளடக்கி சில சாஸ்த்ரங்களை வெளியிடப்பட்டிருக்கின்றன. செடி கொடி மரங்களைப் பற்றியும், ஒவ்வொரு பொருளின் இயற்கைக் குணம்,

சேர்க்கைக்குணம் இவைகளைப் பற்றியும், நக்ஷத்ரங்களைப் பற்றியும், பஞ்ச பூதங்களைப் பற்றியும், அவைகளின் சரீரத்தைப் பற்றியும், தேஹஸ்ருஷ்டியைப் பற்றியும் பக்ஷிகளைப் பற்றியும் அவைகளின் சகுனத்தைப் பற்றியும், சித்திரத்தைப் பற்றியும், அலங்காரத்தைப் பற்றியும், பாகம் முதலியவைகளைப் பற்றியும் பல கிரந்தங்கள் பல முனிவர்களால் வெளியிடப்பட்டன. இவைகளில் அநேகம் தற்சமயம் காணப்படவில்லை. இவைகளைச் சேர்த்து அறுபத்துநான்கு கலைகள் என்று சொல்வார்கள். இத்துடன் பதினெட்டு வித்யைகள் கூறப்பட்டன.

**ஸாங்க்யம்:—** கபில மஹர்ஷியால் ஆறு அத்யாயங்களாக எழுதப்பட்டது இந்த ஸாங்க்ய சாஸ்த்திரம். இதில் ப்ரக்ருதி, புருஷன் என்ற இரண்டில் ஸத்வம், ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களின் ஸமாவஸ்தையான ப்ரக்ருதியினிடமிருந்தே உலகுதோன்றியது. புருஷன் தான் ஒன்றும் செய்யாதவன் என்று அறிந்து வைராக்ய ஸம்பந்நனாயிருத்தலே துக்கநிவிருத்தி (சுகம்) யாகும் என விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இதில் பெரும்பாகத்தை அத்வைதிகள் ஏற்பர்.

**யோகம்:—** பதஞ்சலி முனிவரால் நான்கு பாதங்களாகச்செய்யப்பட்டது யோக சாஸ்த்ரம். இதில் யமம், நியமம் முதலிய எட்டு அங்கங்களால் மனதை ஓரிடத்தில் நிறுத்துவது, யோக ஸித்தியினால் தூரத்திலுள்ள விஷயத்தை இங்கேயிருந்தே உணர்தல், ஆகாய மார்க்கத்திலும், ஜலத்திலும், கனலிலும், ஸஞ்சரித்தல், விரும்பியதைப் பெறல் முதலிய அணிமாதி அஷ்டஐஸ்வர்ய ப்ராப்தி முடிவில் மோக்ஷம் முதலியன கூறப்பட்டுள்ளன. யோகம் என்றாலே மனதை அடக்குவது என பொருள். ஹடயோகம் பல ப்ரத்யக்ஷமான அரிய விஷயங்களைக் கூறுகிறது.

**பாசுபதம்:—** பசுபதியால் ஐந்து அத்யாயங்களாகச் செய்யப்பட்டது. இதில் பதி, பசு, பாசம் என மூன்று உண்டு. பசுவாகிய ஜீவன், பாசமாகிய பந்தத்தை விபூதி

ருத்ராக்ஷதாரணம் பஸ்ம ஸ்நாநம் முதலியவைகளால் ரீச்ரி பதி என்ற பரமசிவனை அர்ச்சித்தல் மோக்ஷமாகும். பாசுபதத்தை விளக்கிப் பின்னர் பற்பல நூல்கள் வெளியாயின.

**வைஷ்ணவம்:—** இது நாரதர் முதலியவர்களால் அநுக்ரஹிக்கப்பட்டு பாஞ்சராத்ரம் என்றழைக்கப்படும். எல்லாவற்றிற்கும் காரணமான பகவான் ஸ்ரீ வாஸுதேவ ரிடமிருந்து, ஸங்கர்ஷணன் என்ற ஜீவனும் அவனிட மிருந்து ப்ரத்யும்நன் என்ற மனதும் அதிலிருந்து அநி ருத்தன் என்ற அஹங்காரமும் உண்டாயின. மனோவாக் காயங்களால் எக்காலத்தும் பகவானை அர்ச்சித்துக் கொண்டிருப்பதே மோக்ஷம். இதைப்பின்னர் ஸ்ரீ ராமா நுஜரும் தேசிகரும் பலப்படுத்தினர்.

**ஸௌரம்:—** ஸூர்யனை ப்ரதானமாகக் கொண்டது. சாக்தம் சக்தி யென்ற அம்பாளை ப்ரதானமாகக் கொண் டது. காணபத்ய மென்பது கணபதியை ப்ரதானமாகக் கொண்டது. கபாலியைத் தொழுவது காபாலம். பாசுபதம் கௌமாரம் முதலிய ஆறுக்கே ஷண் மதம் என்று பெயர் இப்படிப் பல பெயர்கள் கொண்ட மதங்களும் ஒரே கடவு ளைப்பற்றியனவாம். யார் எம்மார்க்க வழியாகச் சென்று லும் அவர் மத்யஸ்தராயும் நித்ய கல்யாணகுண ஸச்சிதா நந்த வஸ்ரூபியாயுமுள்ள பகவானையே அடைகிறார்கள். அவைதிகமான மதங்களை நீக்கி வைதிகமான ஸமஸ்த மதமும் ஸம்மதமென்பது அத்வைதமதம். ஸ்ரீ க்ருஷ் ணன் இதையே "யோ யோ யாம் யாம் தனும் பக்த:" என்ற ஸ்லோகத்தால் விளக்குகிறார்.

---

**ஸங்கல்ப நக்ஷத்ரங்கள்:—** அச்வினீ, பரணீ, க்ருத்திகா, ரோஹிணி, ம்ருகசீர்ஷ, ஆர்த்ரா, புனர்வஸு, புஷ்ய, ஆச் லேஷ, மக, பூர்வ பல்குனி, உத்ர பல்குனி, ஹஸ்த, சித்ர, ஸ்வாதி, விசாக, அனுராத, ஜ்யேஷ்ட, மூல, பூர்வாஷாட, உத்திராஷாட, ச்ரவிஷ்ட, சதபிஷக், பூர்வ ப்ரோஷ்டபத, உத்திர ப்ரோஷ்டபத, ரேவதி.

சுபம்

# சில முக்கிய குறிப்புகள்

த்ரிமூர்த்திகள்:—ப்ரும்மா. விஷ்ணு, ருத்ரன் முறையே ஸ்ருஷ்டி, பரிபாலநம், ஸம்ஹாரம், ஆகிய முத்தொழில்களைக்கொண்டு மூவரும் உலக நன்மை செய்கின்றனர். த்ரிகுணம், ஸத்வம், ரஜஸ் தமஸ், இம்மூன்றும் ஒவ்வொரு பொருளினிடமும் காணப்படும். த்ரிகரணம், மநஸ், வாக், காயம், த்ரிலோகம், ஸ்வர்கம், மத்யம், பாதாளம்.

சதுர்வேதம்:—ரிக், யஜுஸ், ஸாம, அதர்வ, சாதுர்வர்ண்யம். ப்ராம்ம, க்ஷத்ரிய, வைச்ய, சூத்ர புருஷார்த்தம், தர்ம, அர்த்த, காம, மோக்ஷம். யுகம் க்ருத, த்ரேதா, த்வாபர, கலி. ஆச்ரமம். ப்ரும்மசர்ய, கார்ஹஸ்த்ய வாநப்ரஸ்த, ஸந்யாஸம். அந்தக் கரணம் மநஸ், புத்தி, அஹங்காரம், சித்தம்.

பஞ்சபூதம்:— பிருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம். ஞானேந்திரியம். கண், காது, நாக்கு, மூக்கு, த்வக். கர்மேந்திரியம். வாக், பாணி, பாத, பாயு, உபஸ்தம், ப்ராணன். ப்ராண, அபாந, வ்யாந, உதாநஸமான கோசம். அன்னமய, ப்ராணமய, மநோமய, விக்ஞானமய, ஆநந்தமய; பஞ்சாங்கம், திதி, வார, நக்ஷத்ர, யோக, கரண.

ஷண்மதம்:—சைவ, வைஷ்ணவ, சாக்த காணபத்ய, ஸௌர, கௌமார தர்சனம், ந்யாய, வைசேஷிக, ஸாங்க்ய, யோக, மீமாம்ஸா, வேதாந்த, அரிவர்க்கம், காம, க்ரோத, லோப, மத, மோஹ, மாத்ஸர்ய, கர்ம:— யஜந, யாஜந, அத்யயந, அத்யாபந, தாந, ப்ரதிக்ரஹ.

ஸப்தத்வீபம்: ஜம்பு, சாக, ப்லக்ஷ. குச, க்ரௌஞ்ச, சான்மலி, புஷ்கர. ஸங்கல்பவாரம் பானு, இந்து, பௌம, ஸௌம்ய, குரு, சுக்ர, சனி. அஷ்டதிக்பாலர், இந்த்ரன், அக்னி, யமன், நைருதன், வருணன், வாயு, குபேரன், ஈசானன்.

அஷ்டாங்கயோக:— யம, நியம், ஆஸந ப்ராணாயாம, ப்ரத்யாஹார, த்யாந, தாரண, ஸமாதி. ஸித்தி, அணிமா, மஹிமா, கரிமா லகிமா, ப்ராப்தி, ப்ராகாம்ய; ஈசத்வம், வசித்வம். நவக்ரஹம் ஆதித்யன், ஸோமன், அங்காரகன், புதன், பிருஹஸ்பதி, சுக்ரன், சனைச்சரன், ராகு, கேது. தசாவதாரம், மத்யஸ்யம், கூர்மம், வராஹம், நரஸிம்ஹம், வாமநம், பரசுராமர், ராமர், பலராமர், கிருஷ்ணர், கல்கி.

த்வாதச ஆதித்யர்:— மித்ர, ரவி, ஸூர்ய, பானு, கத, பூஷ, ஹிரண்யகர்ப்ப, மரீசி, ஆதித்ய, ஸவிதா, அர்க்க, பாஸ்கர,

# “வைதிக தர்ம வர்த்தினி”

(தர்ம ப்ரசார மாத வெளியீடு).

ஆசிரியர்:

ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா

தனிப்ரதி 6 அணா: வருஷ சந்தா ரூ. 4

---

## விக்ருதி ஐப்பசி முதல் நான்காவது ஆண்டு

*தொடர்ச்சியாய் வெளிவரும் விஷயங்கள்*

40 ஸம்ஸ்காரங்கள்
வேதபாஷ்யம்
ஆன்ஹிக தர்மங்கள்
புராணம்
ஸ்த்ரீதர்மம்
பாலர்பாகவதம்
ஆசௌசவிஷயம்
அறிந்து அனுஷ்டிக்க வேண்டிய அரிய ஆசாரங்கள்
ஸ்ரீமத் பகவத்கீதை
ஸ்ரீ சங்கர உபதேச ரத்னம்
ஸ்ரீ லலிதோ பாக்யானம்—மாதம் 16 பக்கங்கள்
ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்—ஸம்ஸ்க்ருதம், தமிழில்
ஸ்லோகம் – அர்த்தம் – மாதம் 16 பக்கங்கள்

மற்றும் பல அபூர்வ விஷயங்கள்

---

## ஆஸ்திகர் ஆதரிக்க வேண்டிய அரிய அபூர்வ ப்ரசுரம்

---

தங்களையும் ஒரு சந்தாதாரராகப் பதிவு செய்துகொள்ளலாமா?

---

தயவு செய்யவும்—நமஸ்காரம்.

இதை பார்த்த பிறகு தங்கள் நண்பர்களுக்கும் காண்பிக்கவும்.

---

ஆனந்தா ப்ரஸ். 152, புதுச்செரு, மதுரை:-53.